| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **அஹம்** | - | நான், |
| **ஸஷ்வத்** | - | அடிக்கடி, |
| **பஸு:இவ** | - | மிருகம்போல், |
| **பரிபூ⁴தீ:** | - | அவமானங்களை, |
| **அஸ்னுவான: அபி** | - | அடைகிறவனாயிருந்தும், |
| **ஏதம்** | - | இந்த, |
| **விஷய-விஸரம்** | - | பரவும் சிற்றின்ப ஆசையை, |
| **ஹாதும் அபி** | - | விடுவதற்குக்கூட, |
| **அப்ரக³ஸ்ப⁴:** | - | ஸமர்த்தனல்லாதவனாயிருக்கிறேன், |
| **தே** | - | உன்னுடைய, |
| **வேஷ்மனி** | - | இருப்பிடமான, |
| **ஈஷோ** | - | சிவன் விஷயத்தில், |
| **விஷ இவ** | - | விஷத்தினிடத்திற்போல, |
| **ததா²** | - | அவ்வளவு, |
| **விமுக:** | - | பகையுள்ளவனாயிருக்கிறேன், |
| **தவ** | - | உனக்கு, |
| **அஹம்** | - | நான், |
| **கத²ம் இவ** | - | எப்படித்தான், |
| **அங்கீ³கார-பாத்ரம்** | - | ஏற்றலுக்குரியன் ஆவேன்? |

சிற்றின்பங்களில் ஈடுபட்டு, அவற்றை விடமுடியாமலிருப்பவன், கௌரவமாயிருக்கவே முடியாது; அடிக்கடி தன்னை அவமதிப்புக்கு ஆளாக்கிக்கொள்ளத்தான் வேண்டும்; அச்சிற்றின்பங்களில் உள்ள மோஹம் மானத்தை விட்டு இருப்பதையும் தோஷமாகக் கருதவிடுகிறதில்லை. இதைக் கவி முதலடியில் நன்றாய்ச் சொல்லி யிருக்கிறார்.

**40.** Though I am the incessant recepient of humiliations like a beast, I am unable to cast off this spreading sensual craving; and I have turned away from your abode, Siva, as from poison. Such as I am, how am I, O Compassion, deserving of your acceptance?

**अवितरि पुरहन्तर्यस्य सर्वस्य जन्तो**
**मम गतिरबलाद्या नन्वमी सोऽहमेषाम् ।**
**इति कुमतिहतस्तं चिन्तये हन्त नेश**
**स तु कथमनुकम्पे स्यान्मयि त्वद्विषेयः ॥ ४१ ॥**

**அவிதரி புரஹந்தர்யஸ்ய ஸர்வஸ்ய ஜந்தோ**
**மம க³திரப³லாத்³யா நன்வமீ ஸோ(அ)ஹமேஷாம் ।**
**இதி குமதிஹதஸ்தம் சிந்தயே ஹந்த நேஶ**
**ஸ து கத²மனுகம்பே ஸ்யான்மயி த்வத்³விஷேய: ॥ 41 ॥**

**அஸ்ய ஸர்வஸ்ய** - இந்த எல்லா,
**ஜந்தோ:** - ஜீவன்களையும்,
**புரஹந்தரி அவிதரிஸதி** - சிவன் காப்பாற்றுகிறவராயிருக்கும் போது,
**மம** - எனக்கு,
**அமி** - இந்த,
**அப³லா-ஆத்யா:க³தி: நனு** - பத்னி முதலியோர்கள் அல்லவா காப்பாற்று கிறவர்கள்,
**ஸ: அஹம்** - இந்த நானும்,
**ஏஷாம் (க³தி:)** - இப் பத்னி முதலியவர்களுக்கு (காப்பாற்று பவன்)
**இதி** - என்ற,
**குமதி-ஹத:** - தப்பெண்ணத்தால் வீண்போன நான்,
**ஹந்த** - அந்தோ!
**தம் ஈஷாம்** - அந்த சிவனை,
**ந சிந்தயே** - நினைப்பதில்லை,
**ஹே அனுகம்பே** - ஏ தயையே!
**மயி** - என் விஷயத்தில்,
**ஸது** - அந்தச் சிவன்தான்,
**கத2ம்** - எவ்வாறு,
**த்வத்³ விதே⁴ய:** - உன் வார்த்தைக்குக் கட்டுப்பட்டவராய்
**ஸ்யாத்** - இருப்பார்?

குடும்ப வாழ்க்கையில் உழலும் நமக்கு நம் பத்னி புத்ரர்கள் தான் நம்மைத் தாங்குபவர்கள், அவர்களையும் நாம்தான் தாங்குகிறோம் என்ற எண்ணம்; அவர்களையும், நம்மையும், மற்றெல்லா ஜீவராசிகளையுமே தாங்குபவர் பரமேச்வரன் அல்லவா என்ற எண்ணமே தோன்றுவதில்லை; அவ்வெண்ணம் தோன்றினால்லவோ, அவரைப் பற்றிச் சற்று நினைக்கலாம்; அப்படித் தோன்றாததால் நம் பத்னீ புத்ரர்களையே ஸதா நினைத்துக் கொண்டு வீண் போகிறோம். பெரும் தீங்கு நேரிட்டபோதுமட்டும் சிவ தயையை வேண்டினால் அது சிவானுக்ரஹத்தை நமக்கருள முடியுமா?

**41.** "These wife and others are my refuge and I theirs!" Ruined by such erroneous belief, when Siva is the real protector of all living beings, I think not of the Lord. O Compassion! How will he be obedient to you in his attitude towards me?

**विसृमरदहनार्चिर्विप्लुतोऽह्नाय शीतं**
**जलमिव करुणे संत्यक्तसर्वः कदाहम् ।**
**तव पदमुहराडुत्तंसमानन्दसिन्धुं**
**श्रमहरमवगाहे दत्तहस्तो भवत्या ॥ ४२ ॥**

**விஸ்ருமரத3ஹனாசிர்விப்லுதோ(அ)ஹ்னாய ஶீதம்**
**ஜலமிவ கருணே ஸந்த்யக்தஸர்வ: கதா3ஹம் ।**
**தவ பத3முஹூராடு3த்தம்ஸமானந்த3ஸிந்து4ம்**
**ஶ்ரமஹரமவகா3ஹே த3த்தஹஸ்தோ ப4வத்யா ॥ 42 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **விஸ்ருமரத3-தஹன-** | - | பரவும் நெருப்பின் ஜ்வாலைகளால் |
| **அர்சிர்விப்லுத:** | | சூழப்பட்ட, |
| **அஹம்** | - | நான், |
| **ஸந்த்யக்த-ஸர்வம்** | - | எல்லாவற்றையும் விட்டுவிட்டு, |
| **ப4வத்யா** | - | உன்னால், |
| **த3த்-ஹஸ்த:** | - | கை கொடுக்கப்பட்டு, |
| **தவ பத3ம்** | - | உன்னுடைய இருப்பிடமாயுள்ள, |
| **உஹூராடு3-உத்தம்ஸம்** | - | சந்த்ரசூடனான, |
| **ஸ்ரம ஹரம்** | - | சிரமத்தைப் போக்கும், |
| **ஆனந்த3-ஸிந்து4ம்** | - | ஆனந்தக் கடலில், |
| **ஷீதம் ஜலம் இவ** | - | குளிர்ந்த நீரில்போல், |
| **கதா3** | - | எப்போது, |
| **அதா3ய** | - | சீக்ரமாக, |
| **அவகா3 ஹே** | - | முழுகுவேன்? |

குளிர்ந்த சந்திரனைச் சூடிய சிவன் என்றதால் தாபத்தைப்போக்கும் விஷயத்தில் உசிதமான விசேஷணம் கவியால் கொடுக்கப்பட்டது.

**42.** O Compassion! Swept by the flames of spreading fire, when will I, abandoning everything, and given the hand of support.by you, immerse myself quickly, as in cool water, in that abode of yours, Siva, having the crest of the moon, the ocean of bliss and the remover of all fatigue.

**मकुटगविधुनि त्वन्मन्दिरे स्थित्यलाभः**
**स्थितिरियमितरव्यासङ्गदावानले च ।**
**फलमहह दयेऽदः कस्य पापस्य वा द्रा-**
**तन्दिद मुदसनीयं दौःस्थ्यमम्ब त्वया मे ॥ ४३ ॥**

**மகுடக3விது4னி த்வன்மந்தி3ரே ஸ்தி2த்யலாப4:**
**ஸ்தி2திரியமிதரவ்யாஸங்க3தா3வானலே ச ।**
**ப2லமஹஹ த3யே(அ)த3: கஸ்ய பாபஸ்ய வா த்3ரா-**
**தந்தி3த3 முத3ஸனீயம் தௌ3:ஸ்த்2யமம்ப3 த்வயா மே ॥ 43 ॥**

**ஹே த³யே** - ஏ தயையே!
**மகுடக³விது⁴னி** - தலையில் சந்திரனைக் கொண்ட,
**த்வம் மந்தி³ரே** - உன்னிருப்பிடமான சிவனிடத்தில்,
**ஸ்தி²தி அலாப⁴:** - இல்லாமையும்,
**இதர-வ்யாஸங்கா³-தா³வ - அனலே** - மற்ற பற்றுக்களான காட்டுத் தீயால்,
**இயம் ஸ்தி²தி: ச** - இந்த இருக்கையுமான,
**அத³:** - இது (இரண்டும்),
**அஹஹ** - அய்யோ!
**கஸ்ய** - எந்த,
**பாபஸ்ய வா** - பாபத்தின்,
**ப²லம்** - பயன்?
**அம்ப³** - தாயே!
**மே** - என்னுடைய,
**தத்³ இத³ம் தௌ³ள:ஸ்த்²யம்** - இக்கெட்ட நிலைமை,
**த்வயா** - உன்னால்,
**த்³ராக்ஷ** - உடனே,
**உத்³ஸனீயம்** - விலக்கப்பட வேண்டும்.

சிவன் பெரிதா, உலகப்பற்று பெரிதா என்றால், சிவனே பெரிது என்று நன்றாய் தெரிகிறது; ஆனாலும் சிவனிடம் நிலைக்காது, உலகத்திலேயே ஈடுபடுகிறான் மனிதன். இந்த ஸ்வாபாவிகமான கேடு பூர்வபாபத்தினால் தான் ஏற்பட்டதாகும். சிவனுடைய அருளிருந்தால் இக்கெட்ட மனப்போக்கைத் தடுத்து அதைச் சிவனைக் குறித்துச் செல்லும்படி செய்யலாம்.

**43.** O Compassion! Failure to gain abiding stay in Siva, your moon - crested abode, and this stay in the midst of the forest fire of attachment to other things, alas! of what sin is this the fruit? Mother! You must put an end to this sorry plight of mine.

**तनुकरणकदम्बं दक्षमेवं मनस्त्व**
**द्ब्रहचणमनुकम्पे नन्वदाः शंकराख्ये ।**
**प्रदिशसि मम किं न त्यन्निवेशे प्रवेश**
**प्रददति भुवने किं प्राणशून्याय कन्याम् ॥ ४४ ॥**

**தனுகரணகத³ம்ப³ம் த³க்ஷமேவம் மனஸ்த்வ**
**த்³ப்³ரஹசணமனுகம்பே நன்வதா³ः ஶங்கராக்²யே ।**
**ப்ரதி³ஶஸி மம கிம் ந த்யந்நிவேஶே ப்ரவேஶ**
**ப்ரத³த³தி பு⁴வனே கிம் ப்ராணஶூந்யாய கன்யாம் ॥ 44 ॥**

**ஹே அனுகம்பே** - ஏ தயையே!
**தக்ஷாம்** - ஸமர்த்தமாயிருக்கும்,
**தனு-கரண-கத3ம்ப3ம்** - உடல், புலன்கள் இவற்றையும்,
**த்வத்3-ப்ரஹசணம்** - உன்னை அடைந்ததான செல்வத்தோடு கூடிய,
**மன:** - மனத்தையும்,
**ஏவம்** - இப்படி,
**அதா3 நனு** - கொடுத்தாயல்லவா?
**ஸங்கர-ஆக்2யே** - சிவன் என்ற,
**த்வத்3-நிவேஸே** - உன் இருப்பிடத்தில்,
**மம** - எனக்கு,
**ப்ரவேஸம்** - ப்ரவேசத்தை,
**ந ப்ரதி3ஸஸிகிம்** - ஏன் கொடுக்கவில்லை?
**பு4வனே** - உலகில்,
**ப்ராண-சூன்யாய** - உயிரற்ற பிரேதத்திற்கு,
**கன்யாம்** - பெண்ணை,
**ப்ரத3த்3தி கிம்** - கொடுக்கிறார்களா?

சிவத்யானம் இல்லாமல் மன னதிருந்து என்ன பயன்? சிவஸேவை செய்யாமல் உடல், புலன்கள் இருந்து என்ன பயன்? சிவபக்தியைக் கொடுக்காமல், நல்ல கரணகளேபரங்களை மட்டும் கொடுப்பது, உயிரற்றவனுக்கு கன்னிகாதானம் செய்வது போல்; உபமானத்தால், சிவ பக்தி ப்ராணனுக்கு ஒப்பாக அவச்யமானதென ஏற்பட்டது.

**44.** O compassion! Did you not give me a competent body and senses, and a mind enriched by reason of seizure by you; but why do you not give me entry into your abode, viz., Siva? Do people in this world give a bride to a deadman?

**सगरलमधिकण्ठं सानलं फालदेशे**
**सदनमहिपरीतं सवतस्तेऽनुकम्पे ।**
**तदिदमुपगता ये तानिमांस्तन्वती त्वं**
**विहरसि जितमृत्यून्वीक्षितानप्यमीभिः ॥ ४५ ॥**

**ஸக3ரலமதி4கண்ட2ம் ஸானலம் பா2லதே3ஶே**
**ஸத3னமஹிபரீதம் ஸவதஸ்தே(அ)னுகம்பே ।**
**ததி3த3முபக3தா யே தானிமாம்ஸ்தன்வதீ த்வம்**
**விஹரஸி ஜிதம்ருத்யூன்வீக்ஷிதானப்யமீபி4: ॥ 45 ॥**

**ஹே அனுகம்பே** - ஏ தயையே!
**தே** - உன்னுடைய,

**ஸத³னம்** - (சிவன் என்ற) இருப்பிடம்,
**அதி⁴கண்டம்** - கழுத்தில்,
**ஸ-க³ரலம்** - விஷமுள்ளதாயும்,
**பா²ல-தே³ஸே** - நெற்றியில்,
**ஸ-அனலம்** - நெருப்புள்ளதாயும்,
**ஸர்வத:** - எங்குமே,
**அஹி-பரிதம்** - பாம்புகளால் வியாபிக்கப்பட்டதாயும் இருக்கிறது,
**தத்³ இத³ம்** - அப்படிப்பட்ட இந்த உன் இருப்பிடத்தை,
**யே** - எவர்,
**உபக³தா:** - அடைகிறார்களோ,
**தான் இமான்** - அவர்களையும்,
**அமீபி⁴:** - அப்படி அடைந்த இவர்களால்,
**விக்ஷிதான் அபி** - பார்க்கப்பட்டவர்களையும்கூட,
**ஜித ம்ருத்யூன்** - மரணத்தை ஜயித்தவர்களாய்,
**தன்வதீ** - செய்பவளாய்,
**த்வம்** - நீ,
**விஹரஸி** - விளையாடுகிறாய்.

விஷம், நெருப்பு, பாம்பு இவை நெருங்கினவருக்கு மரணவிபத்தை விளைவிக்கக் கூடியவை; ஆனால் இவற்றால் குறிக்கப்பட்ட சிவரூபத்தை அடைந்தவருக்கோ, மரணமே இல்லாத சாச்வத நிலை கிடைக்கிறது என்று கவி விரோதத்தைச் சமத்காரமாய் சொல்லுகிறார்.

**45**. Compassion! Your abode is poisoned at the neck, aflame at the forehead and over - run all over by serpants; and all those who come to such an abode and even those who are seen by such people as have come to this abode, you make victors over death, and sport thus!

**न वितर पदमैन्द्रं न श्रियं वैधसीं वा**
**श्रितभुजगकुलेऽपि क्ष्वेलखेलगलेऽपि ।**
**मम घटय दये त्वन्मन्दिरे संप्रवेशं**
**विगलितविविधव्यासङ्गमेतन्ममालम् ॥ ४६ ॥**

**ந விதர பத³மைந்த்³ரம் ந ஶ்ரியம் வைத⁴ஸீம் வா**
**ஶ்ரிதபு⁴ஜக³குலே(அ)பி க்ஷ்வேலகே²லக³லே(அ)பி ।**
**மம க⁴டய த³யே த்வன்மந்தி³ரே ஸம்ப்ரவேஶம்**
**விக³லிதவிவித⁴வ்யாஸங்க³மேதன்மமாலம் ॥ 46 ॥**

**ஹே தயே** - ஏ தயையே!
**ஐந்த்³ரம் பத³ம்** - இந்திரனுடைய பதவியையாவது,

**வைத4ஸீம் ஷ்ரியம் வா** - ப்ரம்மதேவனின் ஸம்பத்தையாவது,
**ந விதர** - (எனக்குக்) கொடுக்காதே,
**ஷ்ரித-ப்4ஜக3-குலே அபி** - பாம்புக் கூட்டங்கள் அடைந்ததாய்,
**ஷ்வேல-கே2லத்3-க3லே அபி** - கழுத்தில் விஷம் ஒடினதாய் இருந்தாலும்,
**த்வத்3 மந்தி3ரே** - அந்த உன் இருப்பிடமான சிவனிடத்தில்,
**மம** - எனக்கு,
**விக3லித-விவித4-வ்யாஸங்க3ம்** - பலவகைப்பட்ட வேறு பற்றுக்கள் நழுவ,
**ஸம் ப்ரவேஸம்** - முழு ப்ரவேசத்தை,
**க4டய** - செய்து வை,
**ஏதத்** - இந்த சிவப்ரவேசம் (ஒன்றே),
**மம** - எனக்கு,
**அலம்** - போதும்.

**46.** O Compassion! Give me not the state of Indra, nor the fortune of Brahma; but secure for me complete entry into your abode, though it is infested with snakes and poison is flowing at the neck, so that my manifold preoccupations may slip away. That is enough for me.

**तव समुदयरोधं तत्परोऽसौ विधत्ते**
**स्वकचरितमहिम्ना खात्मघाती तमेनम् ।**
**भगवति ननु भर्तु भ्राम्यसीश नुकम्पे**
**तव परहितनिष्ठा तादृशी स्तौतु कस्त्वाम् ॥ ४७ ॥**

**தவ ஸமுத3யரோத4ம் தத்பரோ(அ)ஸௌ வித4த்தே**
**ஸ்வகசரிதமஹிம்னா கா2த்மகா4தீ தமேனம் ।**
**ப4க3வதி நனு ப4ர்து ப்4ராம்யஸீஶ நுகம்பே**
**தவ பரஹிதநிஷ்டா2 தாத்3ரு'ஶீ ஸ்தௌது கஸ்த்வாம் ॥ 47 ॥**

**ஈஷ-அனுகம்பே** - ஏ சிவ தயையே!
**தவ** - உன்னுடைய,
**ஸமுத3ய ரோத4ம்** - எழுச்சிக்குத் தடங்கலை,
**தத்-பர:** - அத்தடங்கலிலேயே நோக்கமுள்ளவனாய்,
**ஸ்வக-சரித-மஹிம்னா** - தன் (கெட்ட) நடத்தையின் மிகையாலேயே,
**ஸ்வ-ஆத்ம-கா4தீ** - தற்கொலை செய்துகொள்ளும்,
**அஸௌ** - இந்த மனிதன்,
**வித4த்தே** - செய்கிறான்,
**தம் ஏனம்** - அப்பேர்ப்பட்ட இவனை,
**ஹே ப4க3வதி** - தேவியே!
**ப4ர்து** - தாங்குவதற்கு,
**ப்4ராம்யஸி நநு** - நீ அலைகிறாயல்லவா!
**தவ** - உன்னுடைய,

| | | |
|---|---|---|
| **பர-ஹித-நிஷ்டா²** | - | பரோபகார நிலை, |
| **தாத்²ருஶு** | - | அப்படிப்பட்டது! |
| **க:** | - | எவன், |
| **த்வாம்** | - | உன்னை, |
| **ஸ்தோது** | - | புகழட்டும்? |

பாபச் செயல்களிலேயே ஈடுபட்ட மனிதன் தன் செயல்களாலேயே தன்னைக் கெடுத்துக்கொள்வதுமல்லாமல், சிவதயை தோன்றித் தன்னைக் காப்பதையும் தானே தடுத்து விடுகிறான்; அப்படியிருந்தும் அவனைக் காப்பதற்காகச் சிவதயை பரபரப்புப்படுகிறது. வலுவில் தடுத்தாட் கொள்ளும் குணமே அதன் பெருமை!

**47.** O Goddess. Compassion! This man who commits suicide by the enormity of his own conduct obstructs your manifestation, being intent on such obstruction; and this person, you run about to support! Such is your firm stand for the good of others. Who can extol you?

**कियदिव विमुखत्वं चित्सुखात्मन्युमेशे**
**रतिरपि कियती मेऽन्यत्र धिष्मां ममास्यं ।**
**असदपि न दये त्वं हास्यसि त्राणमद्धा**
**तव क इह निरोद्धा दासयन्त्यास्तमीशम् ॥ ४८ ॥**

**கியதி³வ விமுக²த்வம் சித்ஸுகா²த்மப்⁴யுமேஶே**
**ரதிரபி கியதீ மே(அ)ன்யத்ர தி⁴ஷ்மாம் மமாஸ்யம் ।**
**அஸத³பி ந த³யே த்வம் ஹாஸ்யஸி த்ராணமத்³தா⁴**
**தவ க இஹ நிரோத்³தா⁴ தா³ஸயந்த்யாஸ்தமீஶம் ॥ 48 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே த³யே** | - | ஏ சிவ தயையே! |
| **மே** | - | எனக்கு, |
| **சித்-ஸுக-ஆத்மனி** | - | ஞானானந்தமயமான, |
| **உமா-ஈஶே** | - | சிவனிடத்தில், |
| **விமுக்²த்வம்** | - | பராங்முகத்வம், |
| **கியத்³ இவ** | - | எவ்வளவு? |
| **அன்யத்ர** | - | வேறு விஷயங்களில், |
| **ரதி: அபி** | - | இன்பமும்தான், |
| **கியதி** | - | எவ்வளவு? |
| **மாம் தி⁴க்** | - | என்னைச் சுடு, |
| **அஸத்³-அபி** | - | தப்பாயிருந்தும், |
| **அஸ்ய-மம-த்ராணம்** | - | என்னைக் காப்பதை, |
| **ந ஹாஸ்யதி** | - | நீ விடுகிறதில்லை, |
| **அத்³தோ⁴** | - | ஆச்சரியம்! |
| **தம் ஈஶாம்** | - | அந்தச் சிவனையே, |

**தா$^{3}$ஸயந்த்யா:** - தனக்கு அடிமையாக்கிக் கொள்ளும்,
**தவ** - உனக்கு (உன்னை),
**நிரோத்$^{3}$தா$^{4}$** - தடுப்பவர்,
**இஹ** - இங்கு,
**க:** - யார்?

ஞானமயமாயும் ஆனந்தமயமாயும் விளங்கும் கடவுளிடம் பற்றின்மையும், துன்பமயமாயும் அஜ்ஞானத்தின் விளைவாயுமிருக்கிற சிறிய விஷயங்களில் பற்றும் எனக்கு ஸஹஜமாயிருக்கிறது; அப்படியிருக்கும் என்னைக் காப்பாற்ற முன் வருவது தவறு; ஆனாலும் சிவதயை என்னைக் காக்கும் வேலையை விடுவதில் லை; சிவன் தன்னிடம் பராமுகமாயிருக்கும் என்னைக்காப்பது தவறு என்று தடுக்க லாம்; ஆனால் அச்சிவனையும் மீறி சிவதயை என்னைக் காப்பாற்றுகிறது.

**48.** How much is my aversion towards that Lord Siva who is of the form of Knowledge and Bliss and how much is my delightlin other things? Fie upon me. You do not give up my rescue though it is bad. Ah! Who is to prevent you who makes a slave of even the Lord?

**अश्रुदूमगदूदवा -**
**गविरल पुल काढ्या भवे भक्तया ।**
**कति न रमन्ते मां शिव-**
**करुणे कुरु तदनुगं ममैतदलम् ॥ ४९ ॥**

**அஶ்ருது$^{3}$மக$^{3}$து$^{3}$த$^{3}$வா -**
**க$^{3}$விரல புல காட்$^{4}$யா ப$^{4}$வே ப$^{4}$க்தயா ।**
**கதி ந ரமந்தே மாம் ஶிவ -**
**கருணே குரு தத$^{3}$னுக$^{3}$ம் மமைதத$^{3}$லம் ॥ 49 ॥**

**ஹே ஷிவ கருணே** - ஏ சிவ தயையே!
**அஶ்ரு-உத்$^{3}$த$^{4}$ம்-க$^{3}$த்$^{3}$ரதா$^{4}$க்$^{3}$-அவிரல-புலக-ஆட்$^{4}$யயா** - கண்ணீர்ப் பெருக்கு, தழதழக்கும் குரல், இடைவிடாத மயிர்க்கூச்சல் இவைகள் செழித்த,
**ப$^{4}$வே ப$^{4}$க்த்யா** - சிவபக்தியோடு,
**கதி** - எவ்வளவு பேர்கள்,
**ந ரமந்தே** - களிக்கவில்லை?
**மாம்** - என்னை,
**தத்$^{3}$-அனுகம்** - அவர்களைப் பின் தொடருபவனாய்,
**குரு** - செய்,
**மம** - எனக்கு,
**ஏதத் அலம்** - இது போதும்.

உத்தமமான சிவப்ரேமை மேலிட்டால் ஏற்படும் லக்ஷணங்கள் கண்ணீர் முதலியன. அப்படிப்பட்ட சிவாநுராகத்தை அநுபவிப்பவரைத் தொடர்ந்து சென்றால் அச்சிவக்காதல் நம்மைப் பிடித்திழுக்கும்.

**49.** With flowing tears, gurgling voice and close horripilation, how many do not delight in their devotion to Siva? O Compassion of Siva! make me their follower; this is enough for me.

**करुणे तरुणेन्दुधर -**
**स्त्वद्वशवतीति तव निशम्य यशः ।**
**तस्मावलम्बमीहे**
**तबूटने प्रतिभुषा त्वया भाव्यम् ॥ ५० ॥**

**கருணே தருணேந்து3த4ர -**
**ஸ்த்வத்3வஶவதீதி தவ நிஶம்ய யஶ: ।**
**தஸ்மாவலம்ப3மீஹே**
**தபூ3டனே ப்ரதிபு4ஷா த்வயா பா4வ்யம் ॥ 50 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ சிவ தயையே! |
| **தருணா-இந்து3த4ர:** | - | சிவன், |
| **த்வத்3வஸ-த2தீம் இதி** | - | உன் வசம் இருக்கிறார் என்ற, |
| **தவ** | - | உன்னுடைய, |
| **யஸ:** | - | புகழை, |
| **நிஸம்ய** | - | கேள்விப்பட்டு, |
| **தஸ்ய** | - | அச் சிவனுடைய, |
| **அவலம்ப3ம்** | - | ஆச்ரயத்தை, |
| **ஈஹே** | - | விரும்புகிறேன், |
| **தத்3 க4டனே** | - | அதை ஸம்பாதித்துக் கொடுப்பதில், |
| **த்வயா** | - | உன்னால், |
| **ப்ரதி பு4வா** | - | ஜவாப்தாராக, |
| **பா4வீயம்** | - | இருக்கப்பட வேண்டும். |

சிவனை அடைவதற்கு சிவதயையே வழி என்பதைக் கவி பலவிதமாய்ப் பல ச்லோகங்களில் சொல்லுகிறார்.

**50.** O Compassion! Having heard of your renown that Lord Siva is under your control, I desire his support; you must be the guarantee in bringing that about.

जनिमृतिदहनाचिः शान्तिदिव्यामृतौघे
जननि शशिविभूषे त्यगृहे संप्रवेशम् ।
विघटयदनुकम्पे विघ्नवृन्दं विभिन्द
न्मयि पततु कदा त्वन्निर्झरः श्रान्तिहारी ॥ ५१ ॥

ஜனிம்ருதித³ஹனாசி꞉ ஶாந்திதி³வ்யாம்ருதௌக⁴
ஜனனி ஶஶிவிபூ⁴ஷே த்யக்³ருஹே ஸம்ப்ரவேஶம் ।
விக⁴டயத³னுகம்பே விக்⁴னவ்ருந்த³ம் விபி⁴ந்த³
ந்மயி பததுகதா³ த்வந்நிர்ஜ²ர꞉ ஶ்ராந்திஹாரீ ॥ 51 ॥

| | | |
|---|---|---|
| ஹே ஜனனி அனுகம்பே | - | ஏ சிவ தயையே! |
| ஜனி-ம்ருதி-த³ஹன அசி꞉ஸந்தி தி³வ்ய-அம்ருத-ஔகே⁴ | - | பிறப்பு இறப்பு என்கிற தீயின் ஜ்வாலைகளை அணைப்பதற்கான திவ்ய அமிர்த வெள்ளமான, |
| த்வத்³-க்³ருஹே | - | உன் இருப்பிடமான, |
| ஸஸி-விபூ⁴ஷே | - | சிவனிடத்தில், |
| ஸம்ப்ரவேஸம் | - | நுழைதலை, |
| விக⁴டயத் | - | தடுக்கும், |
| விக்³ன-வ்குந்த³ம் | - | பாவக்குவியலை, |
| விபி⁴ந்த³ன் | - | தகர்த்துக் கொண்டு, |
| ஷ்ராந்தி-ஹாரீ | - | ச்ரமத்தைப்போக்கும், |
| த்வன்-நிர்ஜர | - | உன் வெள்ளம், |
| மயி | - | என்மேல், |
| கதா³ | - | எப்பொழுது, |
| பதது | - | விழும்? |

சிவபக்தி ஏற்படாமல் தடுத்துவருவது நம் பாபப்ர விருத்தியே; அப்பாப ப்ரவிருத்தியிலிருந்து நம்மைத் தடுத்துச் சிவபக்தியில் திருப்புவதற்கும் சிவதயை தான் உதவவேண்டும்.

**51.** O Mother Compassion! Shattering the mass of inpediments preventing my entry into your abode Siva, which is verily the divine ambrosial stream quenching the flames of the fire of birth and death, when will your torrent, the remover of fatigue, fall on me?

त्वमभिज्ञशिखामणौ महेशे
भजवत्यकुशमन्तुसंततीनाम् ।
यदपह्नुतिपण्डिता दये त
निरवयं तव वेभि साहसिक्यम् ॥ ५२ ॥

**த்வமபி⁴ஜ்ஞஶிகா²மணௌ மஹேஶே**
**ப⁴ஜவத்யகுஶமந்துஸந்ததீனாம் ।**
**யத³பஹ்னுதிபண்டி³தா த³யே த**
**நிரவயம் தவ வேபி⁴ ஸாஹஸிக்யம் ॥ 52 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே த³யே** | - | ஏ தயையே! |
| **ப⁴ஜத்³-அத்யம்-குஷ-மந்து-ஸந்ததீனாம்** | - | ஆச்ரயிப்பவரின் கட்டுக்கடங்காத பாபத்தொடர்களை, |
| **அபி⁴ஜ-ஸிகா²மணௌ** | - | ஸர்வஜ்ஞரான, |
| **மஹஸே** | - | சிவனிடத்தில், |
| **த்வம்** | - | நீ, |
| **யத்** | - | எதனால், |
| **அபஹ்னுதி பண்டி3தா** | - | மறைப்பதில் ஸமர்த்தையோ, |
| **தத்** | - | அதனால், |
| **தவ** | - | உன்னுடைய, |
| **நிரவத்³யம்** | - | மாசற்ற, |
| **ஸாஹஸிக்யம்** | - | ஸாஹஸத்தை, |
| **வேபி⁴** | - | அறிவேன். |

**52.** Since you, O Compassion! are an expert in concealing from even the Great Omnis cient Lord the continuous and unchecked crimes of your devotees, I have come to understand your noble daring.

**करुणे कथये किमाज्ञया ते**
**धनुधावत्यहह स्मरन्ति ये तान् ।**
**मकुटव्य तिष मिचन्द्ररेखं**
**मदनध्वंसि मदीयभागधेयम् ॥ ५३ ॥**

**கருணே கத²யே கிமாஜ்ஞயா தே**
**த⁴னுதா⁴வத்யஹஹ ஸ்மரந்தி யே தான் ।**
**மகுடவ்ய திஷ மிசந்த்³ரரேக²ம்**
**மத³னத்⁴வம்'ஸி மதீ³யபா⁴க³தே⁴யம் ॥ 53 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **கி கத²யே** | - | என் சொல்வேன்? |
| **தே** | - | உன்னுடைய, |
| **ஆஜ்ஞா** | - | கட்டளையின்மேல், |
| **யே** | - | எவர், |
| **ஸ்மரந்தி** | - | நினைக்கிறார்களோ, |
| **தாம்** | - | அவர்களை, |

| | | |
|---|---|---|
| **மகுட-வ்யதிஷமி சந்த்ர ரேக2ம்** | - | கிரீடத்தில் சந்திர ரேகையுடையதும், |
| **மதனத்4வம்ஸி** | - | மன்மதனை அழித்ததுமான, |
| **மதீ3ய-பா4க3தே4யம்** | - | என் அத்ருஷ்டம் (சிவன்), |
| **அனுதா4வதி ஹி** | - | பின் தொடர்ந்து ஓடி வருகிறது, |
| **அஹஹ** | - | ஆச்சரியம்! |

**53.** O Compassion! What shall I say? Ah! at your behest, my Fortune, the destroyer of Cupid and having the digit of the moon fixed to the crown, (viz., Siva) runs to those who think of Him.

**हरिणार्भकमानने तरक्षों**
**रिव कान्तादिमुखे भयानके माम् ।**
**विनिपात्य शिवो विलोकमानः**
**करुणे किं न कदर्थ्यते भवत्या ॥ ५४ ॥**

**ஹரிணார்மகமானனே தரக்ஷோம்**
**ரிவ காந்தாதி3முகே2 ப4யானகே மாம் ।**
**விநிபாத்ய ஶிவோ விலோகமான:**
**கருணே கிம் ந கத3ர்த்2யதே ப4வத்யா ॥ 54 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **தரக்ஷோ:** | - | புலியினுடைய, |
| **ஆனனே** | - | வாயில், |
| **ஹரிண-அர்ப4கம் இவ** | - | மான் குட்டியைப்போல், |
| **ப4யானகே** | - | பயங்கரமான, |
| **காந்தாதி3-முகே2** | - | பத்னி முதலியவற்றின் வாயில், |
| **மாம்** | - | என்னை, |
| **விநிபாத்ய** | - | தள்ளி, |
| **விலோகமான:** | - | பார்த்துக் கொண்டிருக்கும், |
| **ஶிவ:** | - | சிவன், |
| **ப4வத்யா** | - | உன்னால், |
| **கிம்** | - | ஏன், |
| **ந கத3ர்த்2யதே** | - | தடுக்கப்படுவதில்லை? |

**54.** O Compassion! Why do you not thwart Siva, who, having flung me into the fright ful face of wife and the like, even as a fawn would be thrown into the mouth of a tiger, is looking on?

**करुणे तरुणेन्दुधारिणो म**
**करणे शंस तवाम्ब को विलम्बः ।**
**गणितोऽयमहं किलाखिलाङ्गि**
**ष्वयि किं तेषु न मामलेखयस्त्वम् ॥ ५५ ॥**

**கருணே தருணேந்து³தா⁴ரிணோ ம**
**கரணே ஶம்ஸ தவாம்ப³ கோ விலம்ப³: ।**
**க³ணிதோ(அ)யமஹம் கிலாகி²லாங்கி³**
**ஷ்வயி கிம் தேஷு ந மாமலேக²யஸ்த்வம் ॥ 55 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **மத்³-ப⁴ரணே** | - | என்னைத் தாங்கும் விஷயத்தில், |
| **தருணா-இந்து³-தாரிண:** | - | சிவனுக்கு, |
| **ஸம்ஸ:** | - | சொல்லு, |
| **அம்ப³** | - | தாயே! |
| **தவ** | - | உனக்கே, |
| **க: விலம்ப³:** | - | என்ற தயக்கம்? |
| **அகில-அங்கி³ஷு** | - | (பாபம் செய்தல் செய்தல் முதலிய) எல்லா யோக்யதைகளையுமுடையவருக்குள், |
| **அயம் அஹம்** | - | இந்த நான், |
| **க³ணித: கில** | - | எண்ணப்பட்டிருக்கின்றேனல்லவா? |
| **அயி** | - | ஏ தயையே! |
| **தேஷு** | - | அவர்களுக்குள், |
| **மாம்** | - | என்னை, |
| **த்வம்** | - | நீ, |
| **கிம் ந அலேகய:** | - | எழுதிவைக்கவில்லையா?. |

**55.** Compassion! Speak to Siva in the matter of my protection. Why do you hesitate, Mother! I suppose I am counted among those possessing all the necessary qualifications (by having committed sins). Have you not entered my name among them?

**अघवानिति मय्यसंगृहीते**
**सकलाघापहजातुनामवादः ।**
**अपि दोनजनाविततेति कीर्यो**
**रवसादं करुणेऽभिषेहि शंभोः ॥ ५६ ॥**

**அக⁴வானிதி மய்யஸங்க்³ருஹீதே**
**ஸகலாகா⁴பஹஜாதுநாமவாத³: ।**
**அபி தோ³னஜனாவிதேதி கீர்யோ**
**ரவஸாத³ம் கருணே(அ)பி⁴ஷேஹி ஶம்போ⁴: ॥ 56 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **அக⁴வான் இதி** | - | பாபி என்று, |
| **மயி அஸங்க்³ருஹீதே** | - | நான் காப்பாற்றப் படாவிட்டால், |
| **ஸகல-ஆக⁴-அபஹ ஜாது-நாம-வாத³:** | - | ஒரு தரம் நாமாவை ஜபித்தாலும் எல்லா பாபத்தையும் போக்குபவர், |
| **தீன: ஜன-அவிதா அபி** | - | எளியவரைக் காப்பாற்றுபவர் என்ற, |
| **கீர்த்யோ:** | - | அவருடைய புகழ்களுக்கு, |
| **அவஸாத³ம்** | - | நாசத்தை, |
| **ஸம்போ⁴** | - | சிவனிடம், |
| **அபி⁴தே⁴ஹி** | - | சொல்லு. |

**56.** O Compassion! If I am not taken up for support on the ground that I am a sinner, tell Siva that there will be ruin to his reputation as the protector of the distressed and as one the occasional utterance of whose Name destroys all sins.

**मम शंभुदये त्वदर्हताया**
**महमन्यन्न विलोकयाम्युपायम् ।**
**मम चोदितयार्तिभिस्त्वयैव**
**श्रयणीया तदुपायता ब्रुवे किम् ॥ ५७ ॥**

**மம ஶம்பு⁴த³யே த்வத³ர்ஹதாயா**
**மஹமன்யன்ன விலோகயாம்யுபாயம் ।**
**மம சோதி³தயார்திபி⁴ஸ்த்வயைவ**
**ஶ்ரயணீயா தது³பாயதா ப்³ருவே கிம் ॥ 57 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே ஸம்பு⁴-தயே** | - | ஏ சிவ தயையே! |
| **மம த்வத்³-அஹர்தாயாம்** | - | உனக்கு நான் யோக்யமாகும் விஷயத்தில், |
| **அன்யத்³-உபாயம்** | - | வேறு உபாயத்தை, |
| **அஹம்** | - | நான், |
| **ந விலோகயாமி** | - | காணவில்லை, |
| **மம** | - | என்னுடைய, |
| **ஆர்திபி⁴:** | - | ச்ரமங்களால், |
| **சேதி³தயா** | - | தூண்டப்பட்ட, |
| **த்வயா ஏவ** | - | உன்னாலேயே, |
| **த்த³-உபாயதா** | - | அதற்கு உபாயம், |
| **க்ஷரயணியா** | - | தேடப்படவேண்டும், |
| **கிம் ப்⁴ருவே** | - | நான் என் சொல்வேன்? |

**57.** O Compassion of Siva! I do not find any other means for deserving you; what am I to say? You yourself prompted by my sufferings, must seek the means for that.

**पुरभित्करुणे पुरन्दराद्यै**
**स्त्वमुपास्या सुलभा न नस्तथापि ।**
**प्रचकास्ति परातिदुर्लभत्व**
**त्पददर्शी ननु दीनताश्रयो नः ॥ ५८ ॥**

**புரபி⁴த்கருணே புரந்த³ராத்³யை**
**ஸ்த்வமுபாஸ்யா ஸுலபா⁴ ந நஸ்ததா²பி ।**
**ப்ரசகாஸ்தி பராதிது³ர்லப⁴த்வ**
**த்பத³த³ர்ஶீ நனு தீ³னதாஶ்ரயோ ந: ॥ 58 ॥**

| | | |
|---|---|---|
| **புரபி⁴த்-கருணே** | - | ஏ சிவ தயையே! |
| **புரந்த³ர-ஆத்³யை** | - | இந்த்ரன் முதலியோரால், |
| **உபாஸ்யா** | - | போற்றப்படும், |
| **த்வம்** | - | நீ, |
| **ந:** | - | எங்களுக்கு, |
| **ந ஸுலபா⁴:** | - | எளிதில் கிடைக்கத்தக்கவளல்ல, |
| **ததா² அபி** | - | அப்படி இருந்தும், |
| **பர-அதி-துர்லப⁴-த்வத் பத³ த³ர்ஸீ** | - | பிறருக்குக் கிடைப்பதற்கு அரிதான உன் பாதத்தைக் காண்பிக்கும், |
| **தீ³னதா-ஆஷ்ரயா** | - | எளிமை என்ற பிடிப்பு, |
| **ந: ப்ரசகாஸ்தி நனு** | - | எங்களிடம் ப்ரகாசிக்கிறதல்லவா? |

**58.** O Compassion of Siva! You who are adored by Indra and others, are not easy to obtain for us; but, we have in us that shining state of misery which reveals (to us) your feet very hard of access to others.

**भवतीशदये पयोदमाला**
**भवतीत्रानलशान्तिदाश्रितेषु ।**
**तमसामवसादिकाः शिवेक्षा-**
**तटितश्चित्रमचञ्चलाः प्रसूते ॥ ५९ ॥**

**ப⁴வதீஶத³யே பயோத³மாலா**
**ப⁴வதீத்ரானலஶாந்திதா³ஶ்ரிதேஷு ।**
**தமஸாமவஸாதி³கா: ஶிவேக்ஷா-**
**தடிதஶ்சித்ரமசஞ்சலா: ப்ரஸூதே ॥ 59 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே ஈஷ-தயே** | - | ஏ சிவ தயையே! |
| **ஆஸ்ரிதேஷு** | - | அடியார்கள் விஷயத்தில், |

| | | |
|---|---|---|
| **ப4வ-தீவ்ர-அனல ஸாந்தி-தா3** | - | ஸம்ஸாரத்தின் பெரு நெருப்பை அணைப்பதான, |
| **பயோத3-மாலா** | - | மேக மாலை யாயிருக்கும், |
| **ப4வதி** | - | நீ, |
| **தமஸாம் அவஸாதிகா:** | - | இருளை (அஜ்ஞானத்தை)ப் போக்குவதாக வும், |
| **சித்ரம்** | - | அந்தோ! |
| **அசஞ்சலா:** | - | நிலைபெற்றவைகளாயுமிருக்கும், |
| **ஶிவ-ஈக்ஷா-தடித:** | - | சிவ திருஷ்டி என்ற மின்னல்களை, |
| **ப்ரஸூதே** | - | உண்டுபண்ணுகிறாய். |

**59.** O Compassion of Siva! A gathering of clouds that puts down the raging fire of Samsara, you give rise to the lightning - flashes of Siva's glance which destroy the darkness of ignorance and lo, are not fickle.

**करुणे शिवचन्द्रचन्द्रिकासौ**
**भवती सन्मणिसौधसंसदीव |**
**प्रसृतापि मयीह तुच्छकुडये**
**तिमिरं लुम्पतु तावता क्षतिः का ॥ ६० ॥**

**கருணே ஶிவசந்த்3ரசந்த்3ரிகாஸௌ**
**ப4வதீ ஸன்மணிஸௌத4ஸம்ஸதீ3வ |**
**ப்ரஸ்ருதாபி மயீஹ துச்ச2குட3யே**
**திமிரம் லும்பது தாவதா க்ஷதி: கா || 60 ||**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **ஶிவ-சந்த்3ர-சந்தி3ரிகா** | - | சிவனாகிற சந்திரனுடைய சந்திரிகையான, |
| **அஸௌ ப4வதி** | - | இந்த நீ, |
| **ஸன்மணி-ஸௌக4- ஸம் ஸதி3 இவ** | - | நல்லோர் என்ற ரத்ன மாளிகைக் கூடங்களில் (விழுவதுபோல), |
| **துச்ச2 குட்3யே** | - | குட்டிச்சுவரான, |
| **இஹ மயி அபி** | - | இந்த என்னிடத்திலும், |
| **ப்ரஸ்ருதா** | - | பரவி விழுந்து, |
| **திமிரம்** | - | அங்குள்ள) இருளை (அஞ்ஞானத்தை), |
| **லும்பது** | - | போக்கட்டும், |
| **தாவதா** | - | அதனால், |
| **கா ஷ்ரதி** | - | என்ன குறைவு? |

பெரியோர்கள் தங்களுடைய நன்மையை நல்லோரிடம் காண்பிப்பதுபோல, கீழ்ப்பட்டவரிடமும் காண்பிப்பர்; அது அவருடைய இயற்கை.

## न हि संहरते ज्योत्स्नां चन्द्रखण्डा लषेस्मनि

**ந ஹி ஸம்ஹரதே ஜ்யோத்ஸ்னாம் சந்த்³ரக²ண்டா³ லஷேஸ்மனி**

அக்ரஹாரத்தில் விழும் சந்திரன் சேரியில் விழாமல் இருக்குமா? அதுபோல் சிவதயை என்ற சந்திரிகை ஸாதுக்கள் என்ற மாளிகைகளில் திகழ்வது போலவே குட்டிச் சுவரான என்போன்ற அஸத்துக்களிடமும் திகழட்டும்.

**60.** O Compassion, the moonlight issuing out from Siva, spreading yourself on me too, this dilapidated wall, even as on the mansions called the good, may you destroy the darkness (of ignorance). What do you lose thereby?

## कुतुकपरवशैरुमा कटाक्षैः
## कुवलयभाजि नवोडुपावतंसे ।
## जननि तव झरे निमममस्त
## ज्वरभरमारचयेर्दये कदा माम् ॥ ६१ ॥

**குதுகபரவஶைருமா கடாக்ஷை:**
**குவலயபா⁴ஜி நவோடு³பாவதம்'ஸே ।**
**ஜனனி தவ ஜ²ரே நிமமமஸ்த**
**ஜ்வரப⁴ரமாரசயேர்த³யே கதா³ மாம் ॥ 61 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே ஜனனி த³யே** | - | தாயே தயையே! |
| **குதுக-பரவஸை:** | - | களிப்புற்ற, |
| **உமா கடாக்ஷை:** | - | பார்வதியின் கடைக்கண் பார்வைகளினால், |
| **குவலய பா⁴ஜி** | - | நீலோத்பலங்களைக் கொண்டது போலிருப்பதும், |
| **நவ-உடு³ப-அவதம்ஸே** | - | இளம்பிறையாகிற சிறு கப்பலினால் அலங்கரிக்கப்பட்டதுமான, |
| **தவ ஜ³ரே** | - | உன் வெள்ளத்தில், |
| **நிமமஸ்தம்** | - | முழுகினவனாயும், |
| **அஸ்த-ஜ்வர-ப⁴ரம்** | - | தாபம் எல்லாம் ஓய்ந்தவனாயும், |
| **கதா³** | - | எப்போது, |
| **மாம்** | - | என்னை, |
| **ஆரசயே:** | - | செய்வாய்? |

தயை பெருக்கும் வெள்ளம் சிவரூப வெள்ளமாதலால் அதில் பார்வதியின் கடைக்கண் பார்வைகள் ஆம்பல் போலும், வளைந்த சந்திரப்பிறையாகிற தலையாபரணம் சிறுதெப்பம் போலவும் சொல்லப்பட்டது.

**61.** O Mother Compassion! When will you make me immersed in your stream having the lilies of the love - laden sidelong glances of Parvati and adorned by the boat of a fresh moon, and (thereby) cast aside all fever.?

**बत सहविहरहरस्मितानां**
**परिचरणाधिकृता रविन्दभासाम् ।**
**भगवति करुणे त्वयेरितानां**
**पथि किमसान्यहमीशत्रोक्षितानाम् ॥ ६२ ||**

**ப³த ஸஹவிஹரஹரஸ்மிதானாம்**
**பரிசரணாதி⁴க்ருதா ரவிந்த³பா⁴ஸாம் ।**
**ப⁴க³வதி கருணே த்வயேரிதானாம்**
**பதி² கிமஸான்யஹமீஶத்ரோக்ஷிதானாம் ॥ 62 ॥**

| | | |
|---|---|---|
| **ப³த** | - | ஆகா! |
| **ஸஹ-விஹரத்³ ஸ்மிதாநாம்** | - | கூட விளையாடும் புன்னகையுடையவைகளும், |
| **பரிசரணா-அதி4க்ருத அரவிந்த³ பா⁴ஸாம்** | - | தாமரைக் காந்தியை தன் பணியில் வைத்துக் கொண்டவையுமான, |
| **ஹே ப⁴கவதி கருணே** | - | ஏ தேவி சிவதயையே! |
| **த்வயா-ஈரிதானாம்** | - | உன்னால் தூண்டப்பட்டவைகளான, |
| **ஈஷா-தோ⁴ஷதானாம்** | - | சிவனுடைய பார்வைகளின், |
| **பதி²** | - | வழியில், |
| **அஹம்** | - | நான், |
| **அஸானி கிம்** | - | இருப்பேனா? |

**62**. Ah! Would that I am on the pathway of the glances of Siva along which smiles sport and of which the glory of lotuses is an appointed servant, glances that have been sponsored by you!

**सर्वज्ञत्वादिगुणाः**
**स्वात्मत्राणैकलम्पटा बहवः ।**
**शर्वस्य शंकराख्या-**
**निर्वहणं तदये त्वदायत्तम् ॥ ६३ ॥**

**ஸர்வஜ்ஞத்வாதி³கு³ணா꞉**
**ஸ்வாத்மத்ராணைகலம்படா ப³ஹவ꞉ ।**
**ஶர்வஸ்ய ஶங்கராக்²யா -**
**நிர்வஹணம் தத³யே த்வதா³யத்தம் ॥ 63 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே த³யே** | - | ஏ சிவ தயையே! |
| **ஸர்வஜ்ஞத்வ-அதி³-கு³ணா:** | - | ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்ததன்மை) முதலிய (சிவனுடைய), |
| **ப³ஹவ:** | - | பல குணங்கள், |
| **ஸ்வ-ஆத்ம-த்ராண-ஏக லம்படா** | - | தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுவதொன்றிலேயே பற்றுள்ளவை, |
| **ஸர்வஸ்ய** | - | சிவனுடைய, |
| **ஸங்கர-ஆக்²யா-நிர்வஹணம்** | - | சங்கர (நன்மையைச் செய்பவர்) என்ற பேரை நிர்வஹிப்பதென்ற, |
| **தத்** | - | அது, |
| **த்வத்³-ஆயத்தம்** | - | உன்னைப் பொறுத்திருக்கிறது. |

கடவுளுக்கு அவருடைய ப்ரபுத்வத்தைக் காண்பிக்கும் ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்கள் பல; அந்தக் குணங்களைக் கொண்டு அவர் தன் மஹிமையில் பெரியவராய் விளங்கிக் கொண்டிருக்கலாம்; ஆனால் லோகோபகாரமாக அவர் இருந்து கொள்வது சங்கரர் என்ற பெயரால் குறிக்கப்பட்ட குணங்களாலேயே; உலகிற்கு அவர் நன்மையைப் பயந்து, இந்த குணங்களை ஸமர்த்தித்துக் கொள்வது உலகின்பால் அவருக்குள்ள தயையினாலே; ஆகையால் 'சங்கர' என்ற நாமாவுக்கே உயிராயுள்ளது 'தயை.'

**63.** O Compasion of Siva! Several are the attributes (of Siva) like Omniscience which are always anxious to safeguard themselves; (but) the justification of the name Sankara (Giver of welfare) of Siva is dependent on you.

**श्रीकण्ठाय क्ष्वेलं**
**रोचितवत्या दये ननु भवत्या**
**मामकमन्तुकदम्बे**
**केवलमम्बेह वद विलम्बः कः ॥ ६४ ॥**

**ஸ்ரீகண்டா²ய க்ஷ்வேலம்**
**ரோசிதவத்யா த³யே நனு ப⁴வத்யா ।**
**மாமகமந்துகத³ம்பே³**
**கேவலமம்பே³ஹ வத³ விலம்ப³: க: ॥ 64 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே அம்ப³ த³யே** | - | ஏ தயையே! |
| **ஸ்ரீ கண்டா²ய** | - | சிவனுக்கு, |
| **க்ஷ்வேலம்** | - | விஷத்தை, |
| **ரோசிதவத்யா** | - | பிடிக்கச் செய்த, |
| **ப⁴வத்யா** | - | உன்னால், |

| | | |
|---|---|---|
| **இஹ-மாமக-மந்து கத³ம்பே³ கேவலம்** | - | இந்த என் பாவக்குவியலில் மாத்திரம் (அதைச் சிவனுக்கு பிடிக்கச் செய்வதில் மாத்திரம்) |
| **க: விலம்ப³:** | - | என்ன தயக்கம்? |
| **வத³** | - | சொல். |

சிவநாமங்களில் "ஸ்ரீகண்டன்" என்றது மிகவும் அழகியது; கழுத்தில் விஷ முண்டதால் ஏற்பட்ட காந்தியை உடையவர் என்று அதற்குப் பொருள்; அந்தக் கழுத்து விஷத்தழும்பு அவருக்கு உலகைக் காக்கவேண்டும் என்ற கவலையையும், அதற்காக உலகிற்கேற்பட்ட தீங்கைத் தான் ஏற்றுக்கொள்ளும் தன்மையையும் விளக்குகிறது.

**"त्रैलोक्योद्भटकालकूट कबलीकारप्रकारं पुनः, स्तोतुं के प्रथमेऽपि नाम कवयः-"**

**"த்ரைலோக்யோத்³ப⁴டகாலகூட கப³லீகாரப்ரகாரம் புன:, ஸ்தோதும் கே ப்ரத²மே (அ)பி நாம கவய:-"**

என்று கவிகள் வியந்து புகழும் மஹா லீலா விசேஷமிது; சிவனுக்கு உலகின்பால் உள்ள தயை ஒன்றே இக்காலகூடத்தையும் அவர் உட்கொள்ளும்படி செய்தது என்று இங்கே கவி சொல்லுகிறார்:

"தீங்கை ஏற்று, உண்டு, ஜரித்து நலனைப் பயக்கும் பெரும் தகையாளர் சிவன்; ஏ தயையே, நீ சொன்னால் அவர் காலகூடத்தையே உட்கொண்டாரே; என் பாபமோ அதிலும் மிகச் சிறிய தீங்கே; அதையும் அவர் உட்கொண்டு ஜரித்து விடட்டும்; கொஞ்சம் சொல்லு; தயங்காதே" என்று.

**64.** O Mother Compassion! Tell me, what is this hesitation in respect of this lump of my sins alone for you who made even poison tasteful to the blue-necked Siva?

**शिव इति तद्भक्तिरिति**
**स्मृतिरस्य च सेति सार्तिहन्त्रीति ।**
**इयदवगमय्य शेषे**
**विरतिरियं शिवदये न ते सहशी ॥ ६५ ॥**

**ஶிவ இதி தத்³ப⁴க்திரிதி**
**ஸ்ம்ருதிரஸ்ய ச ஸேதி ஸார்திஹந்த்ரீதி ।**
**இயத³வக³மய்ய ஶேஷே**
**விரதிரியம் ஶிவத³யே ந தே ஸஹஶீ ॥ 65 ॥**

**ஹே ஶிவ த$^{3}$யே** - ஏ சிவ தயையே!
**ஶிவ: இதி** - சிவன் என்றும்,
**தத்$^{3}$-ப$^{4}$க்தி-இதி** - அவருடைய பக்தி என்றும்,
**ஸா** - அந்த சிவ பக்தி,
**அஸ்ய** - அந்தச் சிவனுடைய,
**ஸ்ம்ருதி: இதி ச** - நினைவு என்றும்,
**ஸா** - அந்தச் சிவஸ்மிருதி,
**ஆர்தி-ஹந்த்ரே-இதி** - கஷ்டத்தைப் போக்குவது என்றும்,
**இயத்$^{3}$** - இவ்வளவு,
**அவக$^{3}$ம்யம்** - புரியும்படி செய்துவிட்டு,
**ஸேஷே** - உறங்கிப்போகிறாய்,
**இயம் விரதி:** - இந்த ஓய்வு,
**தே** - உனக்கு,
**ந ஸத்ருஸி** - தகுந்ததல்ல.

சிவதயையினால் தான் சிவபக்தியும் அது நம் தாபத்தைப்போக்கும் என்ற ஞானமும் நமக்கு ஏற்படும்; ஏற்பட்டும், சிவதயை கடைசி வரைக்கும் இருந்து காப்பாற்ற வேண்டும். 'பக்திமார்க்கத்திற்கு உயிர் சிவதயையே' என்பது வற்புறுத்தப் பட்டது.

**65.** Siva, His devotion, that devotion as His constant thought, and that thought as destroying distress - after making us understand so much, you go to sleep; O Compassion of Siva! Stopping thus is not proper for you.

**अब्जनयितुमच्युतयितु-**
**मपि शिवयितुमलमुमेशकरुणे त्वम् ।**
**अलमसि शिवरसिकाना-**
**मक्षिपथे किं न मां प्रवर्तयितुम् ॥ ६६ ॥**

**அப்$^{3}$ஜனயிதுமச்யுதயிது -**
**மபி ஶிவயிதுமலமுமேஶகருணே த்வம் ।**
**அலமஸி ஶிவரஸிகானா -**
**மக்ஷிபதே$^{2}$ கிம் ந மாம் ப்ரவர்தயிதும் ॥ 66 ॥**

**ஹே உமேஸ கருணே** - ஏ சிவ தயையே!
**அப்$^{3}$ஜனயிதும்** - (ஒருவனை) ப்ரம்மதேவனாய்ச் செய்யவும்,
**அச்யுதயிதும்** - விஷ்ணுவாய்ச் செய்யவும்,
**ஶிவயிதும் அபி** - சிவனாய்ச் செய்யவும்,
**த்வம்** - நீ,

| | | |
|---|---|---|
| **அலம்** | - | ஸமர்த்தை, |
| **ஶிவ ரஸிகானாம்** | - | சிவனை அனுபவித்து வரும் பக்தருடைய, |
| **அக்ஷிபதே²** | - | பார்வையில், |
| **மாம்** | - | என்னை, |
| **ப்ரவர்தயிதும்** | - | போகும்படி செய்ய, |
| **கிம் அலம் ந அஸி** | - | ஸமர்த்தை அல்லவா என்ன? |

ப்ரம்ம, விஷ்ணு பதவிகளையும் சிவஸாரூப்யத்தையுமே கொடுக்கவல்ல கருணைக்குச் சிவபக்த ஸங்கத்தை எனக்கு ஏற்படுத்திக் கொடுப்பது கஷ்டமா?

**66.** O Compassion of Siva! You are capable of making (the Devotee) Brahma, Vishnu and Siva. Are you not capable of directing me into the ken of those that delight in Siva?

**विजयस्व सिध्यतात्तव**
**विधुशेख रविप्रलम्भनैपुण्यम् ।**
**मन्मन्तुभिरुन्मिषतु च**
**मातः करुणे पिचण्डिलत्वं ते ॥ ६७ ॥**

**விஜயஸ்வ ஸித்⁴யதாத்தவ**
**விது⁴ஶேக² ரவிப்ரலம்ப⁴னைபுண்யம் ।**
**மன்மந்துபி⁴ருன்மிஷது ச**
**மாத: கருணே பிசண்டி³லத்வம்' தே ॥ 67 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே மாத: கருணே** | - | ஏ தாயே கருணையே! |
| **விஜயஸ்வ** | - | வெற்றி பெறுவாயாக! |
| **தவ** | - | உன்னுடைய, |
| **விது⁴ சேகர-விப்ரலம்பனை புண்யம்** | - | சிவனை ஏமாற்றும் ஸாமர்த்யம், |
| **ஸித்⁴யதாத்** | - | பலிக்கட்டும், |
| **மத³-மன்துமி:** | - | என் பாவங்களால், |
| **தே** | - | உன்னுடைய, |
| **பிசண்டி³லத்வம் ச உன்மிஷது** | - | வயிறும் பெறுக்கட்டும். |

சிவனை அவருடைய கருணையே ஏமாற்றுவது என்பது சிவனிடமிருந்து பக்தனின்பாபங்களை மறைப்பது, அவனைச் சிவனிடம் நல்லவன் போல் காண்பிப் பது; அவன் பாவங்களைத் தானே விழுங்கி விடுவதால் கருணைக்குப் பக்தரின் பாபங்களே உணவு என்றும், அதனால் பாவத்தைத் தின்று தின்று தொந்தி பெருத்து விட்டதென்றும் கவி சொல்லுகிறார்.

**67.** O Mother Compassion! Victory to you and may your adeptness in deceiving Siva succeed! And may your belly become bloated with (the devouring of) my sins!

**करुणे यदि मन्मन्तून**
**कबलयसि न विप्रलब्धगिरिशा त्वम् ।**
**का मम गतिस्तवापि च**
**का गतिरागमिरेव जीवन्थ्याः ॥ ६८ ॥**

**கருணே யதி³ மன்மந்தூன**
**கப³லயஸி ந விப்ரலப்³த⁴கி³ரிஶா த்வம் ।**
**கா மம க³திஸ்தவாபி ச**
**கா க³திராக³மிரேவ ஜீவந்த்²யா: ॥ 68 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே!** | - | ஏ சிவதயையே! |
| **விப்ரலப்³த⁴-கி³ரிஸா** | - | சிவனை ஏமாற்றியவளாய், |
| **த்வம்** | - | நீ, |
| **மத்³-மந்துன்** | - | என் பாவங்களை, |
| **யதி³ ந கப³லயஸி** | - | விழுங்காமற்போனால், |
| **மம** | - | எனக்கு, |
| **கா க³தி:** | - | என்னபோக்கு? |
| **அகோ³பி⁴: ஏவ** | - | பாவங்களாலேயே, |
| **ஜீவந்த்ய** | - | ஜீவித்துவரும், |
| **தவ அபி ச** | - | உனக்கும், |
| **கா கதி:** | - | என்ன போக்கு? |

முன் ச்லோகத்தில் சொன்னதையே இங்கு கவி விவரிக்கிறார்: கருணை என்பதின் லக்ஷணம் கஷ்டப்படுபவரிடம் பரிவு காட்டுவது; அந்தப் பரிவு பலிக்க வேண்டுமானால் கஷ்டப்படுவனிடமுள்ள தோஷத்தை கவனிக்காமல் அவனைக் காப்பது; தோஷம் தெரிந்தாலும் மன்னிப்பது; தோஷத்தைத் தனக்குள்ளேயே ஜரித்துக்கொள்ளுவது; ஆகையால் தயை, க்ஷமை என்ற குணங்களுக்கு தோஷமும் பாவமும் ஆஹாரமாகின்றன என்று பக்தரும் கவிகளும் வர்ணிக்கிறார்கள். இப்படிப் பாபிகள் இல்லாமற் போனால் ஈச்வரனின் பொறுமையும் அருளும் விளங்கவே இடமில்லை.

**68.** O Compassion! If you do not deceive Siva and swallow my sins, what go is there for me, and for you too who live exclusively on sins?

**करुणे त्वदध्वगानां**
**कामाया य द्विषस्तदुन्मथने ।**
**गिरिशं त्वयेरयन्त्या**
**कृतोऽस्य भीमोग्रनामसंसर्गः ॥ ६९ ॥**

**கருணே த்வத³த்⁴வகா³நாம்**
**காமாயா ய த்³விஷஸ்தது³ன்மத²னே ।**
**கி³ரிஶம் த்வயேரயந்த்யா**
**க்ருதோ(அ)ஸ்ய பீ⁴மோக்³ரநாமஸம்’ஸர்க³: ॥ 69 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **த்வத்³-அத்³வகா³னாம்** | - | உன் வழி நடப்பவருக்கு, |
| **காம-ஆத்⁴யா** | - | காமம் முதலிய, |
| **த்³விஷ: யே** | - | சத்ருக்கள் எவர் உண்டோ, |
| **தத்³-உன்மத²னே** | - | அவரை அடியோடு அழிக்கும் கார்யத்தில், |
| **கி³ரிஸாம்** | - | சிவனை, |
| **ஈரயன்த்யா** | - | தூண்டிவிடும், |
| **த்வயா** | - | உன்னால், |
| **அஸ்ய** | - | இந்தச் சிவனுடைய, |
| **பீ⁴ம உக்³ர நாம ஸம் ஸர்க³ க்ருத:** | - | பீமன் (பயங்கரன்) உக்ரன்(கடுமையானவன்) என்ற பெயர்கள் ஒட்டும்படி செய்யப்பட்டன |

‘காமாத்யா’: - காம, க்ரோத, லோப, மோஹ, மத மாத்ஸர்யம் என்று ஆறு உட்பகைகள்; இவற்றை ஒழிக்கும் விஷயத்தில் சிவனுடைய பீமன், உக்ரன் என்ற நாமாக்கள் கிருதார்த்தமாகின்றன.

**69.** O Compassion! By prompting Siva to destroy the enemies like lust who beset those walking on your path, you have established Siva’s connection with the names Bhima (Terrible) and Ugra (Fierce).

**शर्वं प्रति मन्मन्तुषु**
**सर्वज्ञतया निवेद्यमानेषु ।**
**आधूय तामम् डढ-**
**मालिङ्गय दये नयाशु परवशताम् ॥ ७० ॥**

**ஶர்வம் ப்ரதி மன்மந்துஷு**
**ஸர்வஜ்ஞதயா நிவேத்³யமானேஷு ।**
**ஆதூ⁴ய தாமமும் ட³ட⁴ -**
**மாலிங்க³ய த³யே நயாஶு பரவஶதாம் ॥ 70 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே த³யே** | - | ஏ தயையே! |
| **ஸர்வ ப்ரதி** | - | சிவனிடம், |
| **ஸர்வஜ்ஞதயா** | - | ஸர்வஜ்ஞதை என்றவளால், |
| **மத்³-மந்துஷு** | - | என் பாவங்கள், |
| **நிவேத்³ய மானேஷு** | - | சொல்லப்படும்போது, |
| **தாம்** | - | அந்த ஸர்வஜ்ஞதையை, |
| **ஆதூ⁴ய** | - | உதறித்தள்ளிவிட்டு, |
| **அமும்** | - | அச்சிவனை, |
| **ட³ட⁴ம்** | - | நெருக்கமாய், |
| **ஆலிங்க³ய** | - | தழுவிக்கொண்டு, |
| **ஆஸு** | - | விரைவில், |
| **பர-வஸதாம்னய** | - | பரவசமாய் செய்துவிடு. |

முன் சொல்லியிருக்கும்படி சிவனுடைய ஸர்வஜ்ஞதை (அதாவது எல்லா மறியும் தன்மை என்ற குணம்), தயை (எல்லாம் பொறுத்தருள்வது என்ற குணம்) - இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை; ஆகையால் இவ்விரண்டு சக்திகளையும் சக்களத்திகள் போலவும், மூத்தவள் புகார் செய்து பக்தனைப்பற்றிச் சிவனிடம் கோள் சொல்வதாயும், இளையவளான தயை ஓடி வந்து தன்னுடைய மேன்மைப்பட்ட வசீகரத்தன்மையால் தடுத்துச் சிவனைத் தன் வசப்படுத்தி, பக்தனான குழந்தையிடம் அநுகூலமாய்ச் செய்து விடுகிறாள் என்று கவி வர்ணிக்கிறார்.

**70.** O Compassion! When Omniscience is reporting to Siva my sins, you brush her (Omniscience) aside, clasp Siva close, and quickly over power Him.

**अहह गिरिशैकताना**
**मभिलषितस्थितिमनातवति मयि ताम् ।**
**आर्तिषु मज्जति वर्तितु**
**मर्हसि न स्तब्धमेवमशद ये ॥ ७१ ॥**

**அஹஹ கி³ரிஶைகதானா**
**மபி⁴லஷிதஸ்தி²திமனாதவதி மயி தாம் ।**
**ஆர்திஷு மஜ்ஜதி வர்திது**
**மர்ஹஸி ந ஸ்தப்³த⁴மேவமஶத³ யே ॥ 71 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே ஈஸ த³யே** | - | ஏ சிவ தயையே, |
| **அஹஹ** | - | அந்தோ! |
| **கி³ரிஸா ஏக தானாம்** | - | சிவனைக்குறித்து ஏகாக்ரமாயிருக்கும், |
| **தாம்** | - | அந்த, |
| **அபி⁴ லஷித** | - | விரும்பிய நிலையை, |
| **மயி அனாப்தவாதி** | - | நான் அடையாமல், |

| | | |
|---|---|---|
| **ஆர்திஷு** | - | துன்பங்களில், |
| **மஜ்ஜதி** | - | முழுகும் போது, |
| **ஸ்தப்³த⁴ம்** | - | உணர்ச்சியற்று, |
| **ஏவம்** | - | இப்படி, |
| **வர்திதும் ந அர்ஹஸி** | - | இருப்பது உனக்குத் தகுந்ததில்லை. |

**71.** Alas! When without getting at that desired state of exclusive concentration on Siva, I am being drowned in miseries, it is not proper for you, O Compassion of Siva, to remain thus in a heartless manner.

**नागांसि यन्महान्त्यपि**
**गण्यन्ते गुणकणो बहु क्रियते ।**
**गिरिशेन तदनुगैरपि**
**तगिरिशे त्वन्निवेशतः करुणे ॥ ७२ ॥**

**நாகா³ம்ஸி யன்மஹாந்த்யபி**
**க³ண்யந்தே கு³ணகணோ ப³ஹு க்ரியதே ।**
**கி³ரிஶேன தத³னுகை³ரபி**
**தகி³ரிஶே த்வந்நிவேஶத꞉ கருணே ॥ 72 ॥**

| | | |
|---|---|---|
| **ஹே கருணே** | - | ஏ தயையே! |
| **கி³ரிஸேன** | - | பரமசிவனாலும், |
| **தத்³-அனுகை³:-அபி** | - | அவருடைய அடியார்களாலும், |
| **மஹாந்தி** | - | பெரிய, |
| **ஆகா³ம்ஸி அபி** | - | பாபங்களும், |
| **யத்³-ந-க³ண்யந்தேதத்** | - | கவனிக்கப்படுவதில்லை என்பதும், |
| **குண-கண:** | - | குணத் திவலையும், |
| **யத்³ ப3ஹு க்ரியதே (இதி) யத் தத்** | - | பெரிதாக்கப்படுகிறது என்பதும், |
| **கி³ரிஸே** | - | சிவனிடத்தில், |
| **த்வத்-நிவேஷத:** | - | நீ தங்கியிருப்பதால். |

**72.** O Compassion! That even enormous sins are not counted and even an iota of merit is magnified by Siva and his adherents is due to your abiding in Siva.

**मतिबागपदेऽनन्ते**
**महेश्वरे मनननमनपूजाभिः ।**
**आगोभिरभावि गुणै**
**रनुकम्पे तस्य तव परिष्वङ्गात् ॥ ७३ ॥**

